# நம் நாடு

## மலர் 4, இதழ் 214 [i.e. 213]

## February 15, 1957

Record no. 1131

REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 அணா ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 85630

# நம் நாடு

தி.மு.க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily ✱ The Official Organ Of The D.P.F.

மலர் 4] சென்னை: மாசி 4உ வெள்ளி (15-2-57) ★ ★ வெளியூர்: மாசி 5உ சனி (16—2—57) [இதழ் 214

## திருத்தியமைக்கப்பட்ட மாநிலங்கள் புதிய தலைநகர்கள் கிடையாது என்கிறார் மத்திய மந்திரி

★

"புதிதாக திருத்தி உருவாக்கப்பட்ட மாநிலங்களுக்கு, புதிய தலைநகரங்கள் நிர்மாணிக்க வேண்டுமென்பது, டெல்லி சர்க்காரின் கொள்கையல்ல" என்று, இந்தியப் பேரசின் உள்நாட்டிலாகா அமைச்சர் பி. என். தத்தார் கூறியிருக்கிறார்.

இப்போதைக்கு கேரள மாநிலத்தின் தலைநகரை, திருவனந்தபுரத்திலிருந்து மாற்றும் நோக்கம் சர்க்காருக்கு இல்லை என்றும் புதிய தலைநகரங்கள் எழுப்புவது மிகுந்த செலவாகும் விவகாரம் என்றும் அவர் கூறியிருக்கிறார்.

# 'தினமணி'யின் 'ஜனநாயக' ஆராய்ச்சி!

## 'காங்கிரஸ் ஆட்சியில் சட்டங்கள் அலட்சியப் புத்தியுடன் நிறைவேற்றப்படுகின்றன'

### 'சட்டசபைக் கட்சிக் கூட்டம் பெயரளவிலேயே நடைபெறுகிறது'

### 'உறுப்பினர்களில் பலர் போதிய கல்வியறிவும் ஆராய்ச்சி மனப்பான்மையுமில்லாதவர்களாயுள்ளனர்'

"சமீப காலத்தில் மந்திரி சபை கொண்டுவந்த சில சட்டங்கள் போதிய நிதான உணர்ச்சியில்லாமலும் தேர்தலில் வெற்றி கிடைக்க வேண்டும் என்ற ஒரே எண்ணத்துடனும் (நியாயமான ஆட்சேபங்களை அசட்டை செய்தும்) கொண்டுவரப்பட்டிருக்கின்றன.

"'ஏழ்மை நிலையிலுள்ள' பெருவாரியான ஜனங்களின் வாழ்க்கைக்குத் திண்டாட்டம ஏற்படக்கூடிய முறையில் 'கஷ்டம் ஏற்பட்டால் பிறகு மாற்றிக்கொள்ளலாம்' என்ற அலட்சியபுத்தியுடன் சில சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன.

"போதிய ஆராய்ச்சி இல்லாமல், நெடுங்கால விளைவுகளை யோசனை செய்யாமல், யாராவது எடுத்துக் காட்டினாலும் செவிசாய்க்காமல் சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன.

"மந்திரி சபையின் பொறுப்பு உணர்ச்சி பற்றிய இந்தக் குறைபாட்டுக்கும் 'பதவி' வகிக்கும் கட்சி உறுப்பினரான சட்டசபை மெம்பர்களும் ஜவாப்தாரியாவர். கட்சி மெம்பர்கள் சட்டசபையில் ஓட்டுச் செய்யும்போது சர்க்காரை ஆதரிப்பது சகஜம். ஆனால் சட்டசபை முன்னுள்ள சட்டத்தின் தன்மை இன்னதென்று புரிந்துகொள்ள முயலவேண்டும். நோக்கத்துக்கு முரணில்லாமல், ஆனால் அநீதிக்கு இடம் தராதபடி எண்ண மாறுதல் வேண்டும் என்பதைத் தெரிந்துகொள்ளக்கூடியவர்களாக இருக்கவேண்டும். ஒரு பிரச்சினையில் மாறுபட்ட அபிப்பிராயம் இருந்தால், அதைச் சட்டசபையில் பகிரங்கமாகச் சொல்லாவிட்டாலும் கட்சிக் கூட்டத்திலாவது சொல்லி வாதாட வேண்டும். மசோதாவை ஆட்சேபித்தால் மந்திரிகள் கோபித்துக் கொள்வார்களோ என்று பயந்து மௌனமாக இருப்பது கூடாது. இந்த முறையில் கட்சிக் கூட்டம் ஜனநாயக முறையிலும் விவாத ஆராய்ச்சியுடனும் நடைபெற வேண்டும்.

"ஆனால் சென்னையில், காங்கிரஸ் சட்டசபைக் கூட்டம் ஒரு ஆராய்ச்சி அரங்கு போலவோ, விவாத அரங்கு போலவோ நடப்பதில்லை. பெயரளவில் 'கட்சிக் கூட்டம்' நடக்கிறது. ஏதோ ஒருவர் இருவர் ஒரு தொகுதியின் தனி நலத்தைக் கருதி ஏதேனும் மாறுதல் சொல்லுகிறார்கள். சில சமயங்களில் கட்சித் தலைவர்கள், மனதிருந்தால் 'சரி' அல்லது 'இல்லை' என்று சொல்கிறார்கள்; அவ்வளவுதான். இதற்குத் தலைவர்கள்மீது மட்டும் குற்றம் சொல்லிவிட முடியாது. சட்டசபைக்குத் தேர்ந்தெடுக்கப்படுபவர்களில் பலர் போதிய கல்வியும் ஆராய்ச்சி மனப்பான்மையும் இல்லாதவர்களாக இருப்பதுதான் இதற்கு முக்கியமான காரணம்.

"இந்த நிலைமை மாறுவிட்டால் 'ஜனநாயகம்' என்பது கோமாளி ராஜ்யமாகிவிடும்."

—'ஜனநாயகத்தின் தேவைகள்' என்ற தலைப்பில், 15-2-57 'தினமணி' இதழ், சென்னை காங்கிரஸ் மந்திரி சபையைப் பற்றி எழுதியுள்ள ஒரு பகுதியே மேலே தரப்பட்டிருப்பவையாகும்.

★★★★-★★★★★★★★★★-★★★★

## நாளை!

16—2—57 சனி (வெளியூர் 17—2—57 ஞாயிறு) 'நம் நாடு' இதழில் ஏற்கனவே தெரிவித்திருந்தபடி, இன்னும் இரண்டொரு தொகுதிகளுக்கான கழக அபேட்சகர்கள் பெயர் வெளிவரும். அத்துடன், காங்கிரசை முறியடிக்கும் நோக்குடன், இரண்டொரு தொகுதிகளில் கழக அபேட்சகர்கள் மற்ற கட்சியினருக்கு விட்டுக் கொடுத்து போட்டியிலிருந்து விலகிக்கொள்ளும் விபரமும் வெளிவரும்.

★-★★★★★★★★★★★★★★★★-★

## காங்கிரசின் இலட்சணம்

பண்டிதர் அளவிடுகிறார்

பாட்னா, பிப் 14—

ஏராளமான தொல்லைகளை விளைவிக்கும் காங்கிரசார், இரு வகையினராகக் காங்கிரசில் உள்ளனராம்!

ஒருசாரார், தேர்தலுக்கு நிற்க கட்சி டிக்கெட் கிடைக்கவில்லை என்பதால், காங்கிரசை விட்டு வெளியேறி காங்கிரசைத் தூற்றுகிறார்களாம்!

மறுசாரார் — முன்னையவர்களை விட ஆபத்தானவர்களாம் — அவர்கள், கட்சிக்குள் இருந்துகொண்டே கட்சிக்கு எதிராக வேலை செய்பவர்களாம்! இவைகளை பண்டித நேருதான் கூறியிருக்கிறார்

'கெஞ்சிக் கேட்டுக்கொள்கிறேன்'

"இவர்களை நான் கெஞ்சிக் கேட்டுக்கொள்வதெல்லாம், 'தயவு செய்து காங்கிரசை விட்டு வெளியேறிவிடுங்கள்; வேறு கட்சியில் சேர்ந்துகொள்ளுங்கள் என்பது தான்' என்றும் அவர் கூறினாராம்!

## பின்தங்கிய மாநிலங்கள் முன்னேற வேண்டியதுதானும்!

### ஆனால் பிறர் உதவியை எதிர்பார்க்கக்கூடாதாம்

பண்டிதரின் உபதேசம்

கட்டாக், பிப். 14—

"இந்தியா முன்னேற வேண்டுமானால், பின் தங்கிக்கிடக்கும் மாநிலங்கள் முன்னேற வழி செய்யவேண்டும்; ஆனால், எவரையும் வேறு ஒருவர் முன்னேற்ற முடியாது. இந்தியாவை இந்திய மக்கள் தவிர வேறு எவரும் முன்னேற்ற முடியாது; அதைப்போலவே ஒரு மாநிலத்தை முன்னேற்ற அதன் மக்களால்தான் முடியும்.

"உதவி செய்வது என்ற கருத்தே முதலில் மாறியாகவேண்டும்.

"சுய உதவி, கூட்டுறவு இவைதான் ஒரு கிராமமோ, ஒரு மாநிலமோ, அல்லது ஒரு நாடோ முன்னேறுவதற்குள்ள வழியாகும்"

என்று, பண்டித நேரு உத்கல் பல்கலைக் கழக மாணவரிடைப் பேசுகையில் குறிப்பிட்டிருக்கிறார்.

## பிரிட்டிஷ் படைகளின் கண்மூடித்தனம்

4 இந்தியர்களை சுட்டு வீழ்த்தினர்

கோலாலம்பூர், பிப் 15—

மலேயாக் காடுகளில் கம்யூனிஸ்டுகளை வேட்டையாடுவதற்காக பிரிட்டிஷ் போர் வீரர்கள் பதுங்கியிருந்தபோது, பன்றி வேட்டைக்காகக் காட்டிற்குள் நுழைந்த 4 இந்தியர்களை அவர்கள் கம்யூனிஸ்டுகள் என்று சந்தேகப்பட்ட பிரிட்டிஷ் இராணுவத்தினர் உடனே சுட்டு வீழ்த்திவிட்டனராம்.

---

நாட்டிலுள்ள தந்தி அலுவலகங்களின் மொத்த எண்ணிக்கை ஐந்தாண்டுத் திட்டத் துவக்கத்தில் 3,592 ஆக இருந்தது—ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் 5,057 ஆக அதிகரித்தது; அதாவது 1,465 காரியாலயங்கள் அதிகமாக ஏற்படுத்தப்பட்டன; ஆனால் நிர்ணயிக்கப்பட்டிருந்த அதிகரிப்பு லட்சிய அளவு 1,200 தானும்!

## டில்லியின் உதவியை மாநிலங்கள் எதிர்பார்க்கக்கூடாதாம்!

### வரிகள் மூலமே தேவையைச் சரிக்கட்டிக்கொள்ள வேண்டுமாம்

ஐதராபாத், பிப். 14—

டில்லி சர்க்காரிடம் மாநிலங்கள், தங்கள் வரவு-செலவுத் திட்டங்களைச் சரிக்கட்ட உதவியை எதிர்பார்ப்பதை நிறுத்திவிட வேண்டுமாம்!

தாங்களாகவே மாநில மக்கள் மீது எவ்வளவு அதிகமான வரி விதிக்கமுடியுமோ அவ்வளவு வரி விதித்து, திட்டத்தைச் சரிக்கட்டிக்கொள்ள வேண்டுமாம்!

இப்படி ஒரு யோசனையை நிதிக் கமிஷன் தலைவர் கே. சந்தானம் தெரிவித்திருக்கிறாராம்.

இந்தக் கமிஷன் தனது சிபாரிசுகளை, வரும் ஆகஸ்டு மாதத்தில் தான் தெரிவிக்கவிருக்கிறது. என்றாலும், தாங்கள் தெரிவிக்கும் சிபாரிசுகள் எத்தன்மைத்தாயிருக்கும் என்பதை இந்தக் கமிஷன் தலைவர் பேசிவரும் பேச்சுக்கள் தெரிவிக்கின்றன.

## கள்ளுக்கடை மறியல் செய்தவர்கள் மதுவிலக்கு திட்டத்தை கைவிடுவர்?

### நஷ்டத்தை ஈடுசெய்யக்கூடிய மாநிலங்களே திட்டத்தை அமுல் செய்யலாமாம்

ஐதராபாத், பிப். 13—

"மதுவிலக்கினால் ஏற்படும் நஷ்டத்தை, மற்ற வருமானங்கள் மூலம் ஈடுசெய்யக்கூடிய மாநிலங்களே மது விலக்கை அமுல் செய்யலாம் என்பதை மத்திய சர்க்கார் தெளிவுபடுத்தியிருக்கிறது" என்று, நிதிக் குழுத் தலைவர் கே. சந்தானம் இங்கு கூறியதாகத் தெரிகிறது.

### எல்லோருக்கும் வேலை தேடித்தர முடியாதாம்!

பண்டித நேரு கூறுகிறார்

கட்டாக், பிப். 15—

"எல்லோருக்கும் அரசாங்கம் வேலை தேடித்தரவேண்டும் என்றால் அது எப்படி முடியும்? படித்த மாணவர்கள் தாங்களாகவேதான் ஏதாவது வேலை தேடிக்கொள்ள வேண்டும்" என்று பண்டித நேரு ஒரிசா மாநிலத்தில் கட்டாக் நகரில் பல்கலைக் கழக மாணவர்களிடை பேசுகையில் கூறியுள்ளார்.

### உடன்கட்டை ஏறியதால் ஏற்பட்ட விளைவு

ஆக்ராவுக்குப் பக்கத்திலுள்ள காசி சர்பாத் எனும் நகரில் 70 வயதுடைய மாது ஒருவர் உடன்கட்டை ஏறிய சம்பவம் ஒன்றினையொட்டி அவரது 4 பிள்ளைகளும் 8 உறவினர்களும் உட்பட 18 பேர் போலீசாரால் கைது செய்யப்பட்டிருக்கின்றனராம்.

### இந்தூர் மாநாட்டு முடிவு காற்றில் பறக்கிறது?

சென்னை, பிப் 15—

தென் சென்னை மக்கள்சபை தொகுதிக்கு காங்கிரஸ் அபேட்சகராகப் போட்டியிடும் டி. டி. கிருஷ்ணமாச்சாரியை ஆதரித்து நேற்று நடைபெற்ற தேர்தல் பிரச்சாரக் கூட்டமொன்றில் பேச்சாளர் ஒருவர் எதிர்க்கட்சிகளின் அபேட்சகர் ஒருவரை தனிப்பட்ட முறையில் தாக்கிப் பேசியபோது, ஆத்திரமடைந்த பொது மக்கள் குழப்பம் விளைவித்துள்ளனர். ஒரு சிலர் கொதிப்படைந்து கற்களையும் மேடைமீது வீசினராம்!

நம் நாடு
தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

சென்னை 15—2—'57 வெள்ளி

# பிரதான 'கங்காணி'!

★

திருத்தவே முடியாது என்று கருதப்பட்ட சோம்பலை முறித்து, விழித்து வீறுகொண்டு எழுந்துவிட்டாள், தமிழ்த் தாய்—தனது ஈடேற்றத்தில் அக்கறைகொண்டுவிட்டாள் என்ற பொன்னான வரலாற்றினை, வெகு அண்மையில் சிருஷ்டிக்கப்போகிறது திராவிட முன்னேற்றக் கழகம்.

தமிழ்த் தாயின் விரோதிகள்—பகைவர்கள், இன்று, 'இந்த வரலாறு சிருஷ்டிக்கப்படக்கூடாது—தமிழ்த் தாய் என்றுமே முன்னேறக் கூடாது' என்ற கருத்தில், திராவிட முன்னேற்றக் கழகத்தினை தேர்தலில் எப்படியேனும் தோற்கடித்துவிட வேண்டுமென்று பகீரத முயற்சிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

கடைந்தெடுத்த பிற்போக்குவாதிகள் என்று தங்களைப் பெருமையோடு பிரகடனப் படுத்திக்கொள்ளும் காங்கிரசாருடன் எல்லோரும் கைகோர்த்துக்கொண்டு, கழக எதிர்ப்புப் பிரசாரத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

தமிழ் மக்களிடத்தில் தாங்கள் இதுகாறும் செப்பி வந்தவை எல்லாம் செல்லாக் காசுகளாகிவிட்டதால் ஏற்பட்ட ஏமாற்றம், அவர்களுக்கு ஆத்திரமூட்டியுள்ளது போலும்! அந்த ஆத்திரத்தில் கழகத்தின்மீது கண்மூடித்தனமான தாக்குதலில் ஈடுபட்டு மூக்குடைபட்டு வருகிறார்கள்.

நாட்டுப் பற்றுக்கொண்ட கழகத்தின் மாசுமறுவற்றக் கொள்கைகள், தன்னலமற்ற சேவை—இவை எல்லாம் மக்களின் உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதிந்து, அவர்களின் நன்மதிப்பிற்குரியனவாகி வருவது காணும் மாற்றார், கழகத்தின் கொள்கைகளில், ஆற்றலில், குறைகாண முடியாத நிலையில், கழகத்தைப் பற்றித் தாறுமாறாக ஏசுவது, கழகத்தவரைத் தாக்குவது என்ற முடிவிற்கு வந்திருக்கிறார்கள்.

தேர்தலில் ஓட்டுப் பெறுவதற்காக, இல்லாததையும் பொல்லாததையும் புனைந்து, ஒட்டுச் சேர்த்து, இட்டுக்கட்டி மக்களிடத்தில் பேசி வருகிறார்கள். இந்த ரீதியில் மாற்றார் செல்வது, மூட்டு அநுபவங்கள் தம்மைச் சாடாது தப்பித்துக் கொள்ள அவர்களுக்குத் துணை புரியாது என்று மட்டும் நாம் எச்சரிக்கவேண்டியவர்களாயிருக்கிறோம்.

ஓட்டுச் சேகரிப்பதற்காக இந்த நாட்டு மக்களிடத்தில், தாங்கள் நீங்காத பற்றுக் கொண்டவர்கள் போலவும், அவர்களின் நலனில் அக்கறை கொண்டவர்கள் போலவும் நடித்து, கழகத்தின் நோக்கம் தவறானது என்ற எண்ணத்தை மக்களிடத்தில் உருவாக்கிவிட மனப்பால் குடிக்கிறார்கள்.

இந்த மகாபுத்திசாலிகள் வரிசையில் மத்திய நிதியமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியார், முதலிடம் பெறத் துடிக்கிறார்.

இவர் ஒரு தமிழராம்; இவர்தான் நிதி மந்திரியாம் டில்லியில்! அதனால், 'டில்லி சர்க்கார் நிதி விவகாரங்களில் அநியாயமாக நடந்துகொள்வதை இவர் அனுமதிக்கமாட்டாராம்!

இப்படி ஒரு சாகசமான பேச்சில் ஈடுபட்டிருக்கிறார், அவர். சோப்பு வியாபாரியாயிருந்த வாசனை, குன்றுமல் மணக்கிறது அவர் பேச்சில்! ஆனால், தமிழ் மக்கள், அவர் கருதிக் கொண்டிருக்கிறபடி ஏமாளிகளாயில்லை என்பதைச் சீக்கிரம் அவர் உணரத்தான் போகிறார்.

இவர் நிதி மந்திரியாயிருக்கிறார் என்பது தமிழ் மக்களுக்குத் தெரிந்ததுதான். வடநாட்டு ஏகாதிபத்தியவாதிகளுக்கு, தமிழ் நாட்டில் கிடைத்துள்ள கங்காணிகளில் பிரதானமானவர் என்றுதான், இவரைத் தமிழ் மக்கள் கருதிக் கொண்டிருக்கிறார்களே தவிர, இவர் நினைக்கிறபடி இவரைப் பெருமையாக மதித்துக்கொண்டிருக்கவில்லை.

இந்தக் கங்காணி, வடநாட்டு ஏகாதிபத்தியவாதிகளின் வழி உரைப்பவராக — வாயிற்காப்போராக இருக்கிறார் என்பது தமிழ் மக்களின் பெருமைக்குரியது என்று இவர் கருதுகிறாரா?

இவர் டில்லியில் மந்திரியாயிருக்கும் கடந்த ஐந்தாண்டுக் காலத்தில், டில்லி, தமிழருக்கு இழைத்த வஞ்சகத்தில்—அநீதியில் இவருக்கும் பங்கு ஏராளமாக உண்டு என்பதைத் தமிழர் அறிந்தே இருக்கின்றனர்.

வர்த்தகம், மற்றும் தொழில் இலாகா மந்திரியாயிருந்த போது இவர்தான், 'சேலத்திலா இரும்புத் தொழிற்சாலை?' என்று கேலி பேசினார்; கிண்டல் செய்தார். வடநாட்டு முதலாளிகளின் தயவுக்காக, டில்லி இவருக்குத் தந்திருக்கும் பதவித் துண்டுக்காகத் தமிழர் தம் நலன்களைத் துச்சமென மதித்து கையாண்டு செய்தார் என்பதை, தமிழர்கள் அதற்குள் மறந்துவிடவில்லையே!

ஐந்தாண்டுத் திட்ட அக்கிரமங்களைத் துணிவோடு டில்லி புரிந்து வருவதற்கு இவர் துணை நிற்பவர்தானே! வடவர் இவருக்கும் இவர் போன்றோருக்கும் பதவி தந்திருப்பதே, தங்களின் ஏகாதிபத்தியப் போக்கிற்கு உறுதி பூசத்தானே தவிர, வேறு எதற்கு? இதனை விழிப்புற்றவரும் தமிழர்கள் உணர்ந்திருப்பதால் இவர் போன்றோரின் நூதனத் தோற்றம் கண்டு ஏமாந்துவிடமாட்டார்கள்.

இவர் நிதி மந்திரி என்பதாலேயே, இவர்தான் டில்லியின் கர்த்தா என்று எண்ணிக் கொண்டு, தனக்குத்தானே ஏமாற்றத்தைத் தேடிக் கொள்ள வேண்டாமென எச்சரிக்கிறோம்.



# நெசவாளருக்கு நண்பர்கள் யார்?

## நெசவாளர் துயர்துடைக்க வழி என்ன?

### போலிகளை அம்பலப்படுத்துகிறார் அண்ணா

5—2—57 அன்று காஞ்சியில் நடைபெற்ற தேர்தல் கூட்டம் ஒன்றில், அண்ணா அவர்கள் ஆற்றிய கருத்துரையின் மற்றுமோர் பகுதி இங்கு தரப்படுகிறது :—

"கம்யூனிஸ்டு நண்பர்கள் பேசுகின்றனர் — 'நாங்கள் அல்லவா நெசவாளர்களுக்கு நண்பர்கள்?'— என்று!

"நெசவாளர்கள் பட்டினி கிடந்த நேரத்தில், தொட்டிலிலே தூங்கிக்கொண்டிருந்த குழந்தையை — தாயினுடைய மார்பகத்திலே பால் இல்லாத காரணத்தினாலே மார்பு விம்மிச் சாகின்ற நிலையிலே இருந்த குழந்தையைத் தூக்கி மார்போடு அணைத்துக்கொண்டு, 'கணவன் எங்கே, எங்கே' என்று அந்தத் தாய் தேடிக்கொண்டு நெருக்கோடியில் செல்லுகையில், 'புளியமரத்திலே தூக்குப் போட்டுக்கொண்டு தொங்குகின்றவன் உன் கணவனு பார்?' என்று பிறர் சொல்லக்கேட்டு, அங்கே போய்ப் பார்த்து அழுது கொண்டிருந்தார்களே, அந்தக் காலத்திலே கம்யூனிஸ்டுகள் என்ன செய்துகொண்டிருந்தார்கள்? அந்தக் காலத்திலே கைத்தறி நெசவாளர்களுக்குச் சாதகமாக எந்தக் காரியத்திலே ஈடுபட்டிருந்தார்கள்?

'தத்துவம் பேசுகிறார்கள்—அறிகிறேன்; சந்தா வசூலிக்கின்றார்கள்—கணக்குத் தெரியும்; கைத்தறி நெசவாளர்கள் பட்டினி கிடந்த நேரத்தில் அவனுடைய நூலுக்கும் சேலைக்கும் விலை கிடைக்கும் சக்தி இல்லாதிருந்த நேரத்தில் — மலைமலையாகக் கைத்தறி ஆடைகள் தேங்கி நின்ற காலத்தில், நாங்கள் அல்லவா தோளின்மேலே மூட்டையைப் போட்டுக்கொண்டு திரிந்தோம்—திருச்சியிலும் தஞ்சையிலும் பிற இடங்களிலும்! அழகிரி கூட, கூட்டமொன்றில் சொன்னாராம்—'என்ன அண்ணாதுரை 51 ரூபாய்க்கு கைத்தறித் துணியை விற்றுவிட்டால் கவலை தீர்ந்துவிட்டதா?'—என்று! அண்ணாதுரையாவது 51 ரூபாய்க்கு விற்றான்; அழகேசன் எவ்வளவுக்கு விற்றார்? கம்யூனிஸ்டுகள் எந்த அளவுக்கு விற்றார்கள்?

"நெசவுத் தொழில் நாசமாக இருக்கின்ற நேரத்திலே வருவார்கள், ஆனால், அவனுடைய நெற்றி வியர்வையும் கண்ணீரும் ஒன்றாகக் கலந்து கீழே விழுந்தபோது, அந்த நேரத்திலே எங்கே போய் இருந்தார்கள்?

"நான் திருச்சியிலே விற்றபோது கம்யூனிஸ்டு நண்பர் இராமமூர்த்தி தஞ்சையிலே விற்றிருக்கலாம் அல்லவா? ஜீவானந்தம் சென்னையிலே விற்றிருக்கலாம் அல்லவா?

"கருணாநிதி நாகப்பட்டினத்தில் விற்றுக்கொண்டிருந்த நேரத்தில், மற்றொருவர் மதுரையிலே விற்றிருக்கலாம் அல்லவா? உங்களுடைய தோள் கம்யூனிஸ்டுக் கட்சிக் கொடியை மட்டுமேதானா ஏந்த வேண்டிய தோள்? எங்களுடைய கண்களுக்கு மட்டுமேதானா கைத்தறி நெசவாளர்களுடைய துயரம் தெரியவேண்டுமா? உங்களுடைய கண்களுக்கு இது எதுவும் தெரியாமல், 'அகில இந்தியா' மட்டுந்தானா தெரியவேண்டும்?

"என்ன கண் ஐயா அப்படிப்பட்ட கண்? என்ன தோள் ஐயா அப்படிப்பட்ட தோள்? எந்த வாயினால் இன்றைய தினம் சொல்லுகிறீர்கள் — 'அண்ணாதுரைக்கும் நெசவாளருக்கும் என்ன சம்பந்தம்?'—என்று!

"அண்ணாதுரைக்கும் நெசவாளருக்கும் என்ன சம்பந்தம் என்பது மட்டுமல்ல — அண்ணாதுரைக்கும் நெசவாளிக்கும் இருக்கும் சம்பந்தத்தின் அளவுக்கு, நெசவாளிக்கும் கம்யூனிஸ்டுகளுக்கும் எப்பொழுது சம்பந்தம் இருந்தது?

'பத்து வருடங்களுக்கு முன்னால் என்று கருதுகிறேன்—கைத்தறி நெசவாளர்கள் துணிகளை நெய்து மலைமலையாகக் குவித்து வைத்துக்கொண்டிருந்தார்கள். நம்முடைய ஊரிலே மெனல் ஒன்று புதிதாக ஆரம்பித்த நேரத்திலே—இப்போது காங்கிரசில் இருக்கிறாரல்லவா நமது நகரப் பிரமுகர் செங்கல்வராயர், அவர்கள் எனிடதில் தாமே வந்தார்? 'அண்ணாதுரை, துணி எல்லாம் தேங்கிவிட்டது; பாமாவுக்கு அனுப்பமாட்டேன் என்கிறான்; சிலோனுக்கு அனுப்பமாட்டேன் என்கிறான்; வா, கூட்டம் போடலாம்—மாநாடு நடத்தலாம்' என்றார்.

"பெரிய காஞ்சீபுரம் வட்டாரத்திலே பெரிய மாநாடு போட்டோம்; நெசவாளர்களை எல்லாம் ஒன்று திரட்டினோம்—குரல் எழுப்பினோம்; பின் அதைத்தேற்ற வசதி கிடைத்தது; துணிகள் எல்லாம் வெளிநாட்டுக்கு ஏற்றுமதி ஆயின; நெசவாளர் துயரம் துடைக்கப்பட்டது.

'யார் அன்றைய தினம் வந்தவர்கள்? தங்கவேலர் அன்றைய தினம் தேவைப்பட்டார்; அண்ணாதுரை அன்றைய தினம் அழைக்கப்பட்டார்; அழைத்துக்கொண்டு போன செங்கல்வராயர், இன்று இங்கேயே இருக்கச் சொல்லிவிட்டு, 'நான் இன்னொரு மார்க்கெட்டுக்குப் போய்வருகிறேன்' என்று காங்கிரஸ் மார்க்கெட்டுக்குப் போயிருக்கிறாரே தவிர, நெசவாளிக்கும் நம்முடைய கழகத்திற்கும் இருப்பதைப் போன்ற தொடர்பு வேறு எந்தக் கட்சிக்கு உண்டு?

"ஆகையால் நெசவாளத் தோழர்களே! உங்களுக்கு எந்தக் கட்சி நட்புக்கட்சி என்பதைப்பற்றி நீங்கள் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

"எந்தக் கட்சியும் இல்லை — என்றே வைத்துக் கொள்ளுங்கள், 'நமக்கு இருப்பதெல்லாம் வேலும் மயிலும் துணை; நாமும் தாமும் துணை; அவ்வளவுதான்' என்று நீங்கள் நினைப்பதானாலும் சரி; நெசவாளிக்கு உள்ள கஷ்டம் தீர்ந்தாகப் போகவேண்டுமானால் அதற்கு என்ன வழி? நெசவாளி நெய்து குவித்துக் கொண்டே இருக்கின்ற நேரத்தில், வடநாட்டிலிருந்து ஆலை ஜவுளிகள் இறங்கிக்கொண்டே இருந்தால் என்றைய தினமும் நெசவாளியின் குறை தீராது. மழை பெய்து கொண்டே இருக்கும்போது கூரையை மாற்றிக்கொண்டே இருப்பதால் என்ன பயன்? குடையிலே ஓட்டை இருந்தால் மழைக்கு அதைப் பிடித்துக்கொண்டே போவதால் என்ன பயன்? அதைப் போல, வடநாட்டு ஆலைகளில் உற்பத்தி செய்யப்படுகின்ற ஜவுளித் தினுசுகள், ஆமதாபாத், கான்பூர்,

(3-ம் பக்கம் பார்க்க)

# தன் இனமக்களின் புனர் வாழ்விற்கு டில்லியின் பெருமுயற்சி

புதுடில்லி, பிப். 14—

மாகாணப் புனரமைப்புக்கு முன் இருந்த மாகாணங்களான ஆந்திரா, ஐதாராபாத், மத்தியப் பிரதேசம், ஒரிசா ஆகியவைகளில் தொடர்ச்சியாகப் பரந்து கிடக்கும் 80,000 சதுரமைல் நிலம், கிழக்கு பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளின் புனரமைப்புக்காக 'சர்வே' செய்யப்படுகிறது.

கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வெளியேறிய அகதிகளின் புனரமைப்புக்குச் செப்பனிட இவ்வளவு பெரிய நிலம் இதுவரையில் ஒதுக்கப்படவில்லை.

★

## இதுவரையில் ரூ. 100 கோடி செலவாகியுள்ளதாம்

கல்கத்தா, பிப். 14—

கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வெளியேறி இந்தியாவுக்கு வந்துள்ள சுமார் 40 லட்சம் பேர்களில், இதுவரையில் சுமார் 20 இலட்சம் பேருக்கு மேல் கிராமப் பகுதிகளிலும், சுமார் 4½ இலட்சம் பேர் நகரப்புறப் பகுதிகளிலும் குடியமர்த்தப்பட்டுள்ளனர். சுமார் 3½ இலட்சம் பேர் முகாம்களிலும் விடுதிகளிலும் பராமரிக்கப்பட்டு வருகின்றனர்; இன்னும் சுமார் 6,80,000-ம் பேருக்கு புனர்வாழ்வுப்பு ஏற்பாடுகள் செய்யப்படவிருக்கிறதாம்!

வெளியேறி வந்தவர்களின் நிவாரண, புனர் வாழ்வுப்பு ஏற்பாடுகளுக்காக 1956 மார்ச் 31-ந் தேதி வரையில் மொத்தம் சுமார் ரூ. 100 கோடி செலவழிக்கப்பட்டிருக்கிறது.

இடம் பெயர்ந்து வந்தவர்களில் சுமார் 27,000 பேருக்குப் பல்வேறு வகையான வேலை பயிற்சிகள் அளிக்கப்பட்டுள்ளன; சுமார் 8,000 பேர் பயிற்சி பெற்று வருகின்றனர். உற்பத்தி நிலையங்கள், சிறு தொழில்கள், குடிசைத் தொழில்கள் ஆகியவை சம்பந்தமான 85 திட்டங்களுக்கு இதுவரையில் அனுமதியளிக்கப்பட்டுள்ளது; இவைகளின் மூலம் சுமார் 9,000 பேருக்கு உத்தியோக வாய்ப்புகள் ஏற்படும். சுமார் 10,000 பேருக்கு வேலை வசதி ஏற்படக்கூடிய மத்தியதர தொழில்கள் சம்பந்தமான இதர 20 திட்டங்களுக்கும் சர்க்கார் அங்கீகாரமளித்துள்ளனர்.

# வறுமையால் நாட்டில் விளையும் அவல நிலை

## 'சாதனைகளைப் பற்றிப் பெருமை பேசுவதில் அர்த்தமில்லை'

அகமதாபாத், பிப். 14—

'விபசாரக் கொடுமை நாளுக்கு நாள் நாட்டில் அதிகரித்துக்கொண்டே வருகிறது இதற்கு முக்கியக் காரணம் வறுமையே ஆகும். வயிற்றுப் பிழைப்புக்காக மட்டும் பெண்கள் இந்தத் தொழிலை மேற்கொள்ளவேண்டிய நிலை இந்நாட்டில் நீடித்துக் கொண்டிருக்கும்வரை, இந்தியா தனது சாதனைகளைப் பற்றிப் பெருமை பேசிக்கொள்வதில் பயனில்லை— அர்த்தமில்லை."

இவ்வாறு, திருமதி துர்க்காபாய் தேஷ்முக் அவர்கள், இங்கு நடைபெற்ற கூட்டம் ஒன்றில் பேசும்போது குறிப்பிட்டிருக்கிறார்.

அகமதாபாதிலுள்ள பெண்கள் காப்பு விடுதி ஒன்றின் அடித்தளக் கல் நாட்டு விழாவின்போது பேசிய அவர், பெண்கள் தவறான

(4-ம் பக்கம் பார்க்க)



# அண்ணா சொற்பொழிவு

(2-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ஷோலாப்பூர், இப்படிப்பட்ட இடங்களில் செய்யப்படுகின்ற வேட்டிகளும் சேலைகளும், தமிழ்நாட்டு மார்க்கெட்டில் கொண்டு வந்து குவிக்கப்படுகின்றவரையில், இங்கே செய்யப்படுகின்ற வேட்டிகளுக்கும் சேலைகளுக்கும் எந்தவிதத்திலும் ஆபத்து வரும்.

"புற்றின்மீது உட்கார்ந்து கொண்டிருந்தால் ஒரு ஐந்து நிமிடம் பாம்பு கடிக்காமலிருக்கலாம் ஏன் என்றால், அந்த நேரத்தில் பாம்பு இரை தேடுவதற்கு வேறு பக்கத்திலே போயிருக்கக்கூடும். எப்படியும், மறுபடியும் அந்தப் புற்றுக்குள்ளே பாம்புவரும்; புற்றின் மீது உட்கார்ந்திருக்கின்ற வரையில் பாம்புக் கடி என்ற ஆபத்து எப்போதும் இருந்துகொண்டே இருக்கிறது.

"அதைப்போல, வடநாட்டு ஆலைத் தொழில் தமிழ்நாட்டு நெசவுத் தொழிலுக்குப் போட்டியாக இருக்கிற வரையில் நெசவாளர்களுடைய அல்லல் தீராது; ஆனால் என்ன இருந்தால் தீரும்? திராவிட நாடு என்ற எல்லைக்கோடு கிடைத்துவிட்டால் தீரும்.

"திராவிட நாடு என்ற எல்லைக்கோடு கிடைத்தால் எப்படித் தீரும்? திராவிட நாட்டுச் சர்க்கார் உட்காருவார்கள்; 'நம்முடைய நாட்டிலே எத்தனை இலட்சம் கைத்தறி நெசவாளர்கள்?—அவர்கள் செய்கிற ரகங்கள் என்னென்ன? நாற்பதா—அறுபதா—எண்பதா? கரை போட்ட வேட்டியா — கரை போட்ட சேலையா—இந்த ரகங்களைக் குறித்து. இந்த ரகங்களை ஆலையில், இங்கேயும் தயாரிக்கக் கூடாது—வெளியிலே தயாரித்தாலும் உள்ளே வரக்கூடாது' என்று ஒரு சிறிய சட்டம் போட்டால் தீரும் பிறகு அல்லல் எப்படி வரும்?

"மலேரியாவுக்கு ஒரே ஒரு 'கொய்னா' மாத்திரை சாப்பிடுவது போல், காலராவுக்கு ஒரே ஒரு ஊசி போட்டுக் கொள்வதுபோல, நெசவாளியின் அல்லல் தீருவதற்கு இந்த மாமருந்து தவிர வேறு மருந்து இருந்தால் காட்டுங்கள். வேறு யாராவது சித்த வைத்தியர் சூரணம் தந்தால், தயவுசெய்து அந்தப் பொட்டலத்தைப் பிரித்துக் காட்டுங்கள். இராசகோபாலாச்சாரியாரே இதைத்தானே சொன்னார், முதல் மந்திரியாக இருந்த நேரத்தில்? வடநாட்டு ஆலை முதலாளிகளைக் கேட்டுக் கொண்டார்—டில்லி சர்க்காரைக் கேட்டுக்கொண்டார் — 'எங்களுடைய நாட்டில் தயாரிக்கப்படுகின்ற கைத்தறி ரகங்களுக்குப் போட்டியாக வடநாட்டிலிருந்து துணிகள் வராமல் தடுத்துவிடுங்கள்' என்று! இப்பொழுது இருக்கிறாரே நிதி அமைச்சர் கிருஷ்ணமாச்சாரி—இவர்தான் அப்போது அங்கே தொழில் அமைச்சராக இருந்தார். அவர் சொன்னார் — 'என்ன பைத்தியக்காரத்தனமான கோரிக்கை? எப்படி என்னாலே ஆலைகளைத் தடுக்க முடியும்?—என்று! அவ்வளவுதான் வெளிப்படையாகச் சொன்னார்; உள்ளூர அவருடைய மனது என்ன சொல்லிக் கொண்டிருந்ததென்றால், 'இது என்ன? என்னை இந்தக் காரியத்தைச் செய்யச் சொல்லுகின்றார்களே; ஆலை முதலாளிகளைத் தடுத்து விட்டால், டாட்டா என்னைத் தண்டிப்பாரே; பிர்லா என்னுடன் பேசமாட்டாரே; பஜாஜ் எனக்கு விருந்தளிக்கமாட்டாரே?— என்று, அவர் மனதிற்குள்ளே எண்ணிக்கொண்டு வடநாட்டு ஜவுளிகளை இங்கு இறக்குவதற்கு வழி செய்து வைத்தார்.

"இப்போது திராவிட முன்னேற்றக் கழக உறுப்பினர்களை நீங்கள் சட்டசபைக்கு அனுப்பி வைத்தால், அங்கே இதுபற்றி நாங்கள் தட்டிக்கேட்க முடியும்."

# சோக வரலாறு:

"தென்னிந்தியாவில், தொழில் வளர்ச்சி மிகப் பின்தங்கிக் கிடக்கிறது.........

"இந்தப் பகுதியில் தொழில் வளர்ச்சியைத் துரிதப்படுத்தும் நோக்குடனும் அருகில் கிடைக்கும் இயற்கை வளங்களைப் பயன்படுத்தும் நோக்குடனும் 'காஸ்டிக் சோடா தொழிற்சாலை ஒன்று தூத்துக்குடிக்கருகே துவங்கப்பட்டது......இதனை நடத்த, அங்கீகரிக்கப்பட்ட ஒரு கோடி ரூபாய் முதலீடு கொண்ட 'ஹெவி கெமிக்கல்ஸ் லிமிடெட்,' என்ற நிறுவனமும் அமைத்தோம்......முதல் கட்டத்தில் தினம் 5 டன் காஸ்டிக் சோடா உற்பத்தி செய்வது; இரண்டாம் கட்டத்தில் தினம் 10 டன் உற்பத்தி செய்வது என்பது திட்டமாகும்.

"சுவிட்சர்லாந்து நாட்டைச் சேர்ந்த பிரபல கம்பெனிகள், தொழிற்சாலைக்கான இயந்திரங்களை அமைத்தன. அவைகள் நிறுவப்பட்ட ஹெவி கெமிக்கல்ஸ் நிறுவனத்தின் முதலீட்டிலும் பங்கு பெற்றன.

"1930-ம் ஆண்டிலேயே சென்னை சர்க்கார், கம்பெனியில் ரூ 10 இலட்சம் பெறுமான முதலீட்டுப் பங்கு பெற்றுக்கொள்வதாக வாக்களித்திருந்தது. ஏற்கனவே ரூ 17 இலட்சம் முதலீடும் சேர்ந்துவிட்டது.

"1953-ல், மைசூர் மகாராஜா, தொழிற்சாலைக்கு அஸ்திவாரக் கல் நாட்டினார். 1954ல் சென்னை கவர்னர் ஸ்ரீபிரகாசா தொழிற்சாலையின் பரிசோதனைக் கூடத்தைத் திறந்துவைத்தார்.

"நூறு ஏக்கர் நிலம் வாங்கி வேலி அமைத்து தொழிற்சாலைக்கான கட்டிடங்கள், தொழிலாளர்கள், அதிகாரிகள் ஆகியோருக்கான வீடுகள் எல்லாம் கட்டி முடிந்தாயிற்று

"இயந்திரங்களைச் சீக்கிரம் பெற்றுவருவதற்காக ஜே எல் பி. ரோச் விக்டோரியா, சுவிட்சர்லாந்து சென்று ஏற்பாடுகளை முடித்து வந்தார்.

"மின்சார இயந்திரங்கள் சென்னை 'கிராம்டன் எஞ்சினியரிங் கம்பெனியாரிடமிருந்து வாங்கப்பட்டுவிட்டன.

"தொழிற்சாலைக்குள், இரயில் பாதைகளை தென் பகுதி இரயில்வே இலாகாவினர் போட்டுவிட்டனர்.

"பாளையங்கோட்டை—தூத்துக்குடிச் சாலையை, தொழிற்சாலை இருக்குமிடத்துடன் இணைக்கும் சாலைக்கான வேலையும் முடிந்துவிட்டது.

"இரண்டு குழாய்க் கிணறுகளும் வேறு இரு கிணறுகளும், தண்ணீர் தரத் தயாராகிவிட்டன.

"டெலிபோன் வசதி ஏற்கனவே செய்யப்பட்டுவிட்டது.

"இந்தத் தொழிற்சாலைக்கான பெர்மிட், லைசென்ஸ் முதலியன ஐந்தாண்டுகளுக்கு முன்பாகவே மத்திய சர்க்காரால் தரப்பட்டது.

ஆனால்......!

"1955-ல், சௌராட்டிர மாநிலத்தை (வடநாட்டை)ச் சேர்ந்த 'தாரங்கதாரா கெமிகல் ஒர்க்ஸ்' என்ற கம்பெனியாருக்கு, மதுரை டி. வி. சுந்தரம் அய்யங்கார் கம்பெனி மூலம் மத்திய சர்க்கார், தூத்துக்குடி அருகே சோடா ஆஷ் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை ஒன்றை நிறுவ அனுமதி தந்தனர்.

"அவர்கள் முதலில், சோடா ஆஷ் மட்டுமே தயாரிக்கப்போவதாகக் கூறி, பின்னர் காஸ்டிக் சோடாவும் தயாரிக்கப்போவதாக அறிவித்துள்ளனர்.

"இது, 1953-ம் ஆண்டே வேலை துவங்கிவிட்ட 'ஹெவி கெமிக்கல்ஸ்' ஸ்தாபனத்திற்கு இழைக்கப்படும் அநீதியாகும்.

"சென்னை சர்க்காரிடம் இதுபற்றிப் பல முறை முறையிட்டோம். ஆனால், சென்னை சர்க்கார் கையாலாகாதவர்களாயிருக்கின்றனர். ஏனெனில், 'சென்னை மாநிலத்தில் என்ன செய்ய வேண்டும்—என்ன செய்யக் கூடாது' என்று மத்திய சர்க்காரின் வர்த்தகத் தொழில் இலாகா கட்டளை இடுகிறது. சென்னை சர்க்கார் மத்திய சர்க்காரின் பாவாடை நாடாவில் கட்டுண்டு கிடக்கிறது.

எனவே......!

'தென்னாட்டின் தொழில் வளர்ச்சியில் அக்கரை கொண்ட எல்லோரும் ஒன்று சேர்ந்து, பொதுவாகத் தென்னாட்டுடையவும், குறிப்பாகச் சென்னை மாநிலத்தினுடையவும் பொருளாதார விடுதலை, நமமிடமிருந்து தட்டிப் பறித்துச் செல்லப்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசர அவசியமானதாகும்...."

இவை, சென்னை மாநில முன்னாள் உணவு அமைச்சரும் இன்றைய காங்கிரஸ் எம். எல். ஏ.-யுமான ஜே. எல். பி. ரோச் விக்டோரியா அவர்கள், 1956 செப்டம்பர் முதல் தேதியிட்டுத் தமிழ் நாட்டு அரசியல்வாதிகளுக்கு அச்சடித்து அனுப்பியுள்ள பகிரங்கக் கடிதத்தின் பகுதிகள்.

## வடவரின் இந்தப் போக்கு

தென்னாட்டு மக்களை கலப்பற்ற—பரிபூரணமான நிரந்தர அடிமைகளாக்கச் சதிசெய்யும்

## ஏகாதிபத்தியப் போக்கு

என்று கண்டனம் முழங்குகிறது

# தி. மு. க.

★

## இதுதான் 'இந்திய ஒற்றுமை' என்கின்றனர் 'அகில இந்தியா'க்கள்!

★

## வாக்காளரே! கூறுங்கள்!

உங்கள் நாட்டுக்குத் துரோகம் இழைக்கும் வடநாட்டு ஏகாதிபத்திய தாசர்களான

## 'அகில இந்தியா'க்களுக்கா உங்கள் வாக்கு?

★

நாடு செழிக்க—நாட்டவர் வாழ்வுபெற

# தி. மு. கழக அபேட்சகர்களுக்கே

வாக்கு அளியுங்கள்!

****************************

ஆசிரியருக்குக் கடிதம் :

## மதுரை ஜில்லா போர்டார் கவனிப்பார்களா?

ஐயா,

மதுரை மாவட்டம் மேலூர் தாலுகா, மாம்பட்டி கிராமத்தில் ஜில்லா போர்டின் நிர்வாகத்திலுள்ள ஓர் ஆரம்பப்பள்ளி, கடந்த இரு ஆண்டுகளாக நன்முறையில் நடைபெறாமல் தற்போது மூடியே கிடக்கிறது. இவ்வாண்டில், பள்ளியிலிருந்து மூன்றுக்கும் மேற்பட்ட ஆசிரியர்கள் மாற்றலாகிவிட்டனர். புதிதாக வந்த ஆசிரியர்கள் இருவர்—கணவன்—மனைவி, பள்ளி வேலைகளை ஒழுங்காகச் செய்ததில்லை. ஆசிரியை பள்ளிக்கு இதுவரை வந்ததில்லை. அவரது கணவரும் ஓரிரு நாட்கள் பள்ளியை நடத்திவிட்டு, மற்றைய நாட்களில் பள்ளியை மூடிவிடுகிறார்.

எங்களூர் ஆரம்பப்பள்ளியில் எழுபதுக்கு மேற்பட்ட சிறுவர்கள் பயின்று வருகிறார்கள். கடந்த மூன்றாண்டுக் காலமாகப் பள்ளியில் ஒரே ஒரு ஆசிரியர் மட்டுமே இருந்து வந்திருக்கிறார். துணையாசிரியர்கள் பலர் வந்தும், அவர்களில் எவரும் பள்ளியில் நிலையாக இருந்ததில்லை. இப்படி இதுவரை பள்ளி ஒழுங்காகவே நடைபெறவில்லை. கடந்த பத்து நாட்களாகப் பள்ளி மூடியபடியே இருக்கிறது. கிராமங்களிலுள்ள பள்ளிகளின் நிலை இது எனில், எங்கள் பிள்ளைகள் கல்வியறிவு பெற்று முன்னேறுவது எங்ஙனம்? இந்நிலையை இன்னும் நீடிக்கவிடாமல் கல்வி இலாகாவினர் கவனித்து உடனடி நடவடிக்கைகளில் ஈடுபடுமாறு வேண்டிக்கொள்கிறோம்.

மு. வெள்ளக்கருப்பன்,
மரு சுப்பையா,
ந உ. நல்லையா,
பெரி. சுப்பையா,
பெரி. போசலான்.
மலம்பட்டி கிராமம்.

புதிய பல்கலைக் கழகங்கள்

## ஏற்பட இயலாது?

ஆமதாபாத், பிப். 14—

"புதிய பல்கலைக் கழகங்களை அமைக்கச் சில மாகாணங்கள் முயன்று வருகின்றன. ஐந்தாண்டுத் திட்டத்தைக் கடைப்பிடிக்காத தலைவனின் நிலைக்கு இது சமமாக வந்துவிடும்,"

என்று இந்தியப் பல்கலைக் கழக மானியக் குழுத் தலைவர் சி. டி. தேஷ்முக் கூறியிருக்கிறார்.

"திட்டம் இல்லாமல் செய்யும் இதுபோன்ற செயல்களுக்கு மானியக் குழு எந்தவகையிலும் பொறுப்பாக முடியாது; தற்போது இருக்கும் பல்கலைக் கழகங்களின் வளர்ச்சிக்கு மட்டிலுமே மானியக் குழு உதவ முடியும். புதிய பல்கலைக் கழக அமைப்புகளுக்கு உதவ மானியக் குழுவினால் இயலாமலிருக்கிறது," என்றும் அவர் குறிப்பிட்டுக் கூறினாராம்.

# துணிப் பங்கீடு

குழந்தைகளின் உடைகள், கொசு வலைகள் முதலியவற்றிற்கு பிப். 10-ந் தேதியிலிருந்து பங்கீடு முறை அமுலுக்கு வருகிறது என்று சீன அரசாங்கம் அறிவித்துள்ளது. இதுவரை இவற்றிற்குப் பங்கீட்டு முறையிலிருந்து விதிவிலக்கு அளிக்கப்பட்டிருந்தது.

துணிப்பங்கீட்டு முறைப்படி சீனாவில் இப்பொழுது வயதுவந்த ஒவ்வொருவருக்கும் ஆண்டு ஒன்றுக்கு 56 அடி பருத்தித் துணி அளிக்கப்படுகிறது. மேற்கண்ட புது நடவடிக்கையை ஒட்டி, துணி பங்கீடு அளவு அதிகரிக்கப்படுகிறதா என்று அறிவிக்கப்படவில்லை.

இந்தியாவிலுள்ள தபால் நிலையங்களின் எண்ணிக்கை 1947-ஆகஸ்ட் 15-ந் தேதியன்று 22,116 ஆக இருந்தது—முதலாவது திட்டத் துவக்கத்தில் 36,094 ஆக ஆயிற்று. முதலாவது ஐந்தாண்டுத் திட்ட இறுதியில் அவைகளின் எண்ணிக்கை 55,000-க்கும் அதிகமாகப் பெருகிவிட்டதாம்.

# அண்ணா

சுற்றுப்பயணம்

பிப். 16 மாலை: திருச்செங்கோடு, சங்ககிரி பொதுக் கூட்டங்கள்; இரவு 10 மணி: நாமக்கல் (சேலம்) 'சந்திரோதயம்' நாடகம்.

பிப். 17 மாலை: சேந்தமங்கலம் (சேலம்) இராசிபுரம்தொகுதிகளில் பொதுக்கூட்டங்கள்;

பிப். 18 மாலை 4 மணி: வல்லூர்; மாலை 5 மணி: மீஞ்சூர்; இரவு 7 மணி: ஆரணி; இரவு 9 மணி: பொன்னேரி

---

பொதுச்செயலாளர்

## இரா. நெடுஞ்செழியன்

நிகழ்ச்சிகள்

18-2-57 மாலை 6 மணிக்கு, பூந்தமல்லியிலும், இரவு 8 மணிக்கு பரந்தூர் கிராமத்திலும் நடைபெறும் தேர்தல் பொதுக்கூட்டங்களில் பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன் கலந்து கொள்ளுவார்.

---

### சென்னை நாடக சங்கப் பொதுக்கூட்டம்

17—2—57 மாலை 5 மணிக்கு. சென்னை — தேனாம்பேட்டை 46-வது வட்ட நாடகச் சங்கச் சார்பில் தோழர் ஜி ஒய் பொன்னையா தலைமையில் ஒரு பொதுக் கூட்டம் நடைபெறும்

தோழர்கள் பி. பாலசுப்பிரமணியம், டி. எம். சண்முகம் எம்.சி, தோழியர் எஸ். விசயலட்சுமி ஆகியோர் பேசுவர்.

---

### சென்னையில் 'தாயத்து' கட்டிச் சென்ற பண்டிதர்!

#### கட்டாக்கில் சோதிடத்தைக் கண்டிக்கிறார்

கட்டாக், பிப் 13—

"மாணவர்களிடையேகூட சோதிடம் கேட்கும் வியாதி பலமாகப் பரவியிருப்பதுபற்றி மிகவும் வருந்துகிறேன். கல்வி கற்பதற்கு மாணவர்களுக்குச் சோதிடர்கள் எவ்வாறு உதவி புரியமுடியும் என்று எனக்குப் புரியவில்லை. விஷயங்களைக் கற்றுக்கொள்ள விரும்பும் மாணவர்கள் கடுமையாக உழைக்கவேண்டியது அவசியமாகும்" என்று பண்டித நேரு மாணவர்கள் கூட்டத்தில் பேசுகையில் சோதிடத்தைப் பற்றிய தன்னுடைய கருத்தை வெளிப்படுத்தினார்.

---

### போராட்டம் ஒத்திவைப்பு

திருவனந்தபுரம், பிப். 13—

திருவனந்தபுரத்தில் உயர் நீதிமன்றக் கிளை ஒன்று ஏற்படுத்த வேண்டுமெனக் கோரி கடந்த 105 நாட்களாக நடைபெற்றுவந்த போராட்டம், பொதுத் தேர்தல் முடிவுற்று புதிய அமைச்சரவை ஏற்படும்வரையில் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது. நகரில் விதிக்கப்பட்டிருந்த தடை உத்தரவும் நீக்கப்பட்டிருக்கிறது

---

## வறுமையால்...

(2-ம பக்கத்தின் தொடர்ச்சி)

வழிகளில் செல்வதைத் தடுக்கவும், வியாபார முறையில் மறைமுகமாக நடைபெறுகின்ற விபசாரத்தை ஒழிக்கவுமான மித்த தீவிர நடவடிக்கைகளை மேற்கொள்வதென மத்திய சமூக நலக் கழகம் முடிவு செய்துள்ளதாக அறிவித்துவிட்டு, மேலும் குறிப்பிட்டதாவது:—

"தவறான வழிகளில் சென்ற பெண்களைக் காப்பாற்றி அவர்களை நல்வழிப் படுத்த மத்திய சமூக நலக் கழகம் ரூ. 10 கோடி செலவழிக்கத் திட்டமிட்டிருக்கிறது. நாடெங்கிலும் சுமார் 430 பாதுகாப்பு விடுதிகள் திறக்கப்படும். இங்கு, மீட்கப்பட்ட பெண்களுக்குத் தொழில் பயிற்சி அளிக்கப்படும். அதன் மூலம், அவர்கள், தங்கள் வாழ்க்கைச் செலவுக்குப் போதுமான பொருளீட்ட பயிற்சி அடைவார்கள். அதற்குப் பிறகு அவர்களை சமுதாயத்தில் மானத்துடன் வாழச்செய்ய சமூகத் தொண்டர்களும் சீர்திருத்த மனப்பான்மையுடையவர்களும் பெருமுயற்சி எடுத்து உதவவேண்டும்."

---

புரட்சி நடிகர்

# எம். ஜி. இராமச்சந்திரன்

## சுற்றுப்பயண விவரம்

**பிப். 19:**
காலை 8 மணி — வழுதாவூர்; 9 மணி: விழுப்புரம் (சிறப்புக் கூட்டம்); பிற்பகல் 2 மணி: மாயவரம் (சிறப்புக் கூட்டம்); 4 மணி: பொறையார் (சிறப்புக் கூட்டம்) 5 மணி: நாகூர் (சிறப்புக் கூட்டம்); 6 மணி: நாகை; இரவு 8 மணி: கூடந்தை (சிறப்புக் கூட்டம்); 10 மணி: அதிராம்பட்டினம்; 11 மணி: பட்டுக்கோட்டை (சிறப்புக் கூட்டம்); 12 மணி: மன்னார்குடி (நாடகத் தலைமை).

**பிப். 20:**
காலை 9 மணி: தஞ்சை (சிறப்புக் கூட்டம்); 11 மணி: கந்தர்வகோட்டை (பொதுக்கூட்டம்); பகல் 1 மணி: லால்குடி (பொதுக் கூட்டம்); மாலை 4 மணி: (சேலம்)வேலூர் (பொதுக் கூட்டம்); 6 மணி: கரூர் (சிறப்புக்கூட்டம்); இரவு 10 மணி: திண்டுக்கல் 'இன்பக் கனவு' நாடகம்.

**பிப். 21:**
காலை 9 மணி: சித்தையன் கோட்டை; 11 மணி: பட்டிவீரன்பட்டி; பிற்பகல் 4 மணி; உடுமலைப்பேட்டை தொகுதி.

**பிப். 22, 23, 24:**
நாகர்கோயில் — நாடகங்கள்.

**பிப். 25:**
காலை 10 மணி: ஸ்ரீவில்லிபுத்தூர் (சிறப்புக் கூட்டம்); பிற்பகல் 4 மணி: திருக்கோட்டியூர் தொகுதி

**பிப். 26:**
காலை 10 மணி: கம்பம் (சிறப்புக்கூட்டம்); பகல் 12 மணி: உத்தமபாளையம் தொகுதி; பிற்பகல் 4 மணி: தேனி தொகுதி; இரவு 10 மணி: மதுரை 'சுமைதாங்கி' நாடகம்.

**பிப். 27:**
தேனி தொகுதி; இரவு 9 மணி: திருச்சி.

**மார்ச் 1:**
காஞ்சிபுரம் தொகுதி.

**மார்ச் 2:**
காலை 8 மணி: லால்பேட்டை; 9-30 மணி: சிதம்பரம் (சிறப்புக் கூட்டம்); 10-30 மணி: திருமுஷ்ணம்; பிற்பகல் 2 மணி: நெல்லிக்குப்பம்; 4 மணி: கடலூர்; 6 மணி: கள்ளக்குறிச்சி.

**மார்ச் 3:**
சேலம் தொகுதி.

**மார்ச் 4:**
காலை 10 மணி: அரூர்; 12 மணி: சிங்காரப்பேட்டை; பிற்பகல் 3 மணி: திருப்பத்தூர் (வ.ஆ.); 5 மணி: கந்திலி; 6-30 மணி: ஜோலார்பேட்டை; 8-30 மணி: வாணியம்பாடி.

**மார்ச் 5, 6:**
சென்னை நகரத் தொகுதிகள்.

**மார்ச் 8:**
குளித்தலைத் தொகுதி.

**மார்ச் 9:**
மதுரை மத்திய தொகுதி.

குறிப்பு:—தோழர் எம் ஜி இராமச்சந்திரன் அவர்களுடன் நடிகர் என் எஸ். நாராயணன் அவர்களும் சுற்றுப்பயணத்தில் கலந்து கொள்வார். இச்சுற்றுப்பயணம் இனிது நடைபெற வேண்டுமானால், ஆங்காங்குள்ள கழக நிர்வாகிகளும், கழக அபேட்சகர்களும் அதற்கான ஏற்பாட்டினை ஒழுங்கு பெறச்செய்து, தோழர் எம். ஜி. ஆர் அவர்களுக்கு, கூட்டநெருக்கடியில் யாதொருவித குறைபாடோ, தொல்லையோ, ஏற்படாதவாறு, முன்னெச்சரிக்கையுடன் தக்க முறையில் ஆவன செய்யுமாறு வற்புறுத்திக் கேட்டுக்கொள்கிறோம்.

—தலைமைக் கழகம் (தி மு. க)

---

## சி. பி. சிற்றரசு

சுற்றுப்பயணம்

பிப்ரவரி:
16: கந்திலி
17: திருப்பத்தூரும், பகுதிகளும்
18, 19: செங்கம் பகுதிகள்
20: சின்னக்குப்பம், பள்ளிப்பட்டி, மஞ்சவாடி, பாபிரெட்டிபட்டி, எ. தரிஞ்சிப்பட்டி, பொம்மிடி, கடத்தூர், உடசல்பட்டி, அரூர்;
21: சமயைபயால்லூர், இருமத்தூர், போச்சம்பள்ளி, சந்தூர், மன்னண்ட ஹல்லி, மத்தூர், குன்னத்தூர், சாமல்பட்டி, கல்லாவி;
22: ஜெகதேவி, பருகூர், வெங்கடசமுத்திரம், கப்பல்வாடி, ஓரட்டணபல்லி, கிருஷ்ணகிரி;
23: நத்தம், சுந்திரம்பள்ளி, குனிச்சி புதுப்பேட்டை, நாட்றம்பள்ளி;
24: ஆலங்காயம், குரிசிலாபட்டு, ஆண்டியப்பனூர், மடவாளம், வெங்களாபுரம், பொம்மேகுப்பம், மூத்தம்பட்டி;
25: எக்கூர், பெரியதன்னபாடி, மோட்டூப்பட்டி, சிங்காரப்பேட்டை;
26: மட்ரபள்ளி, ஸீடமங்கலம், பேராம்பட்டு, குரும்பேரி

---

### தேர்தல் ஊர்வலம்

17—2—57 காலை 8 மணிக்கு, சென்னை—சேத்துப்பட்டு ஜெகநாதபுரம் 33-வது வட்டக் கிளை கழகத்திலிருந்து தேர்தல் ஊர்வலம் புறப்படும்.

---





---

தி. மு. கழகத் தேர்தல்

## நிதியளிப்புக் கூட்டங்கள்

★

சென்னை—இராயபுரம்:

18-2-57 மாலை 6-30 மணிக்கு சென்னை—இராயபுரம் ஆதம் சாயபு தெருவில், துறைமுகத் தொழிலாளர்கள் சார்பில் தி. மு. கழகத் தேர்தல் நிதி அளிப்புக் கூட்டம் தோழர் காஞ்சி-கல்யாணசுந்தரம் தலைமையில் நடைபெறும்.

தோழர்கள் என். வி நடராசன், க. அன்பழகன், என். சீவரத்தினம், மாணவி-சற்குணம் ஆகியோர் பேசுவர்.

ஆவடி:

18—2—57 மாலை 4 மணிக்கு ஆவடி முத்தியாலம்மாள் ரைஸ் மில் அருகில் தி. மு. கழகத் தேர்தல் நிதியளிப்புக் கூட்டம் தோழர் ஆ. முனுசாமி தலைமையில் நடைபெறும்.

பொதுச்செயலாளர் இரா. நெடுஞ்செழியன், தோழர்கள் சி. வி. எம். அண்ணாமலை, தி. ந. சம்பந்தம் ஆகியோர் பேசுவர்.

---

## பெரம்பூர் தொகுதி

### தேர்தல் பொதுக் குழு உறுப்பினர்கட்கு:

"18—2—57 இரவு 8 மணிக்கு. சென்னை—பெரம்பூர் தொகுதி தலைமைத் தேர்தல் அலுவலகத்தில் (123 பெரம்பூர் பாரக்ஸ் ரோடு-ஜமாலியா, திரு. வி. க. நிலையம் சமீபம்) தொகுதித் தேர்தல் பொதுக்குழுக் கூடும். உறுப்பினர்கள் தவறாது கலந்து கொள்ளுமாறு கோருகிறேன்" என்று, தொகுதிக் குழுத் தலைவர் தோழியர் சத்தியவாணி-முத்து அறிவிக்கிறார்.

---

## தேர்தல் கூட்டங்கள்

★

சென்னை 48-வது வட்டம்

18-2-57 மாலை 6 மணிக்கு, சென்னை—மேட்டுப்பாளையத்தில் 48-வது வட்ட தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் ஏ. எஸ். ஜேசுபாதம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் என். வி நடராசன், பி. பாலசுப்பிரமணியம், சைதை-சம்பந்தம் ஆகியோர் பேசுவர்.

சென்னை — நுங்கம்பாக்கம்

15-2-57 மாலை 6 மணிக்கு, சென்னை நுங்கம்பாக்கம் ஜெமினி ஸ்டுடியோ பின்புறம், 34-வது வட்ட தி. மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் இரா. சம்பந்தம் தலைமையில் நடைபெறும். தோழர்கள் பி பாலசுப்பிரமணியம், க. அன்பழகன், ஏ. வி. பி ஆசைத்தம்பி, ஆகியோர் பேசுவர்.

கடலூர்

16-2-57 மாலை 5 மணிக்கு, கடலூர் ஓ. டி. செட்டி கோவில் தி. வில் தோழர் சி. கோவிந்தராசன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் இரெ. இளம்வழுதி, க. அறிவழகன், ஏ. கே. வில்வம், கே. ஜி. சாமிநாதன் பேசுவர்.

* * *

16-2-57 இரவு 7 மணிக்கு, கடலூர் மஞ்சைநகர் மைதானத்தில், தி. மு. கழகத் தேர்தல் பொதுக்கூட்டம் தோழர் வாணிதாசன் தலைமையில் நடைபெறும். தோழர்கள் இரெ. இளம்வழுதி க. அறிவழகன், ஏ. கே. வில்வம், கே. ஜி. சாமிநாதன் ஆகியோர் பேசுவர்.

நாகப்பட்டினம்

17-2-57 இரவு 7 மணிக்கு, நாகப்பட்டினம் மிஷன் உயர்நிலைப் பள்ளிக்குப் பின்புறமுள்ள மைதானத்தில் நடைபெறும் தேர்தல் பொதுக்கூட்டத்தில் தோழர் கண்ணதாசன் சொற்பொழிவாற்றுவார்.

ஆற்காடு

17-2-57 மாலை 6 மணிக்கு, ஆற்காடு பெரியார் மைதானத்தில் தி மு. கழகத் தேர்தல் பிரச்சாரக் கூட்டம் தோழர் வேணுகோபால் தலைமையில் நடைபெறும். தோழர்கள் சுரதா, கோகுல கிருஷ்ணன், ஏ. கே. வில்வம் ஆகியோர் பேசுவர்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம்.ஏ. அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, நாராயணசெட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம். ஏ.

